# கம்பர் மலர்





மயிலைத் தமிழ்ச் சங்கம்

மயிலை : : சென்னை-4.

# கம்பர் மலர்






## மயிலைத் தமிழ்ச் சங்கம்

மயிலை :: சென்னை-4.

# மயிலைத் தமிழ்ச் சங்கம்

---

தலைவர் :

திரு ம. வி. இராகவன்

துணைத் தலைவர் :

திரு அ. நாராயணசாமி
,, பூவாளூர் சுந்தரராமன்
,, பி. தூ. நாதமுனி

செயலாளர் :

திரு. வே. இராமகிருஷ்ணன் (பொது)
,, வே. க. அரங்காச்சாரி (துணை)

பொருளாளர் :

திரு அ. விசயராகவன்

செயற்குழு உறுப்பினர் :

திரு என். எஸ். வைத்திய நாதன்
திரு க. சிவசிதம்பரம்
திரு கே. ஆர். ஜெயராமன்
திரு டி. டி. நரசிம்ம தாத்தாச்சாரியார்
திரு என். எஸ். தியாகராச சர்மா
திரு பூ. ஜெயராமன்
திருமதி க. முத்துலட்சுமி
திருமதி எஸ். விஜயலட்சுமி
திருமதி ———

# அஞ்சலி



மயிலைத் தமிழ்ச் சங்கம் செந்தமிழ்த் தொண்டினையே சிறப்பான நோக்கமாகக் கொண்டுள்ளது. இஃது இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத் தமிழையும் முறையாக வளர்ப்பதையே பணியாகக் கொண்டு இயங்கும். பொதுவாகப் பொது மக்களிடையிலும், சிறப்பாக மாணவர்களிடையிலும் தமிழ் மொழியறிவை வளர்த்தல், இலக்கியப் பயிற்சிக்கு வகை செய்தல், இலக்கிய இலக்கண வகுப்புக்கள் நடத்தல், தேர்வுகள் நடத்திச் சான்றிதழ்களும் பரிசுகளும் வழங்கல், பேச்சு, கட்டுரை, கதை,

கவிதை, இசை ஆகியவற்றில் போட்டிகள் நடத்தல், சிறந்த இலக்கியச் செய்திகளை நாடகக் காட்சிகளாக அமைத்து நடிக்கச் செய்தல், தமிழ்ப் பெரியார்களின் நினைவு நாட்களைக் கொண்டு சொற்பொழிவாற்றுவித்தல், பழைய நூல்களை ஆராய்தல், புதிய வெளியீடுகளையும், பாட நூல்களையும் ஆராய்ந்து குணங் குறை களைக் கண்டு கூறுதல், பழைய இலக்கியங்களைத் திருந்திய மலிவுப் பதிப்புக்களாக வெளியிடுதல், புதியனவாகச் செய்யுள் உரைநடை நூல்களை வெளியிடுதல் போன்ற பல வகைகளிலும் இச்சங்கம் திட்டமிட்டுத் திறம்பட செயலாற்ற விரும்பு கிறது.

அன்பர் பலர் கொண்ட ஊக்கத்தால் முன்னரே இயங்கி வந்த இச்சங்கம் மறுபடியும் சென்ற ஆண்டில் கூடியது. பணி யாளர் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

தமிழுக்குத் தொண்டு செய்யும் பேரவாவுடன் இந்த ஆண்டிலே இச்சங்கம் பணி செய்யத் தொடங்குகின்றது.

கம்பர் விழாவினைச் சிறந்த முறையில் நடத்திடவும், விழா வன்று கம்பர் மலர் வெளியிடவும் விரும்பி இக்கம்பர் மலரினை வெளியிடுகிறோம்.

இவ் விழா நினைவு மலருக்கு நல்ல கட்டுரைகள் அளித்து உதவிய பெரியோர்களுக்கும், மலர் வெளிவர உதவி அளித் துள்ள பெருந்தகையோர்க்கும் எம் நன்றியையும், அன்பையும், பணிவையும் அறிவிக்கின்றோம்.

# சிந்தனைக் கம்பன்

இராமாயண கலாமணி,

**சி. வி. இராமசுவாமி ஐயங்கார்.**

தன் கவிதை வெப்பத்தால் வால்மீகி எனும் கடலைக்குடித்த கம்பன் தன் 'ராம காதை' என்ற மேகத்தால் தமிழ் மழை பொழிகின்றான்! இம் மழை சில சமயங்களில் ஆலங்கட்டிக ளாகவும் உதிர்கின்றன. அப்படி உதிரும்போது தான் அம் மழைக் கட்டிகளின் வெண்மையிலும் தண்மையிலும் மென்மை யிலும் மெருகிலும் ஈடுபட்ட தமிழறிஞர்கள் அதனை வாரி யெடுத்து ருசித்தும் இறைத்தும் குதூகலிக்கின்றனர். அப்படிக் குதூகலமடையும் அவர்கள் உள்ளங்களிலும் அச்சுவையை உண்டு நன்று ரஸிக்க முடியாத சில உள்ளங்களிலும் ஒரு சிறிய ஐயவினாத் தோன்றுகின்றது.

இது என்ன? முதல் நூலாகிய வால்மீகத்தில் இல்லையே! அந்தக் கடலில் உள்ளடங்கிய முத்துக்கள் இப்படி நீரோடு வீழ் கின்றனவோ? என்றெல்லாம் தோன்றலாம். மெய்ப்பாடுடன் இவ்வுன்னதக் கவிஞனை யணுகுவோர் அவனே இவைகளுக்கு விடையளித்துள்ளதை ஆங்காங்கு கண்டு சூத்திரமாகக் காட்டி விடுகின்றனர்! காண்போம்.

மிதிலையைக் காண்கின்றனர் முனிவரொடுவந்த குமரரிரு வரும். இப்படி அவர்கண்ட மிதிலையைத் தானும் கண்டு திளைத்த கம்பன், மிதிலைக் காட்சிப் படலத்தை முடிக்கின்றான். மிதிலை அவர்களைக்காணும் காட்சியையும் காட்சிப் படலத்தில் முடிக் கின்றான். வந்துள்ள இராமனைக்கண்டு காப்பிய முதலிலிருந்து அந்தச் சுந்தரவில்லியிடம் மனத்தைப் பறிகொடுத்த கம்பர் இக் காட்சிப் படலத்தில் அச்சுந்தரனை மணக்கப்போகும் வல்லியைக் கண்டு விடுகின்றான். அவனைக்கண்ட தேவர்களும்,

" இமையா நாட்டம் பெற்றிலம்" என்றார்; இருகண்ணால்

அமையாதென்றார் அந்தரவானத்தவரெல்லாம்"

என்று பேசியது

அக் கவிஞன் காதுகளில் விழுந்தது போலும். இப்படி இத் தலைவியின் அழகில்தான் தன்னையிழந்த அக்கணமே தலைவன்

வருகையும், கண்டு "இவளைக் கண்டு விடுவானே இராமன்; என்ன நேரிடுமோ?"

"மங்கையர்க்கினியதோர் மருந்துமாய், அவள்
எங்கள் நாயகர்க்கினி யாவதாங்கொலோ?"

என்றெல்லவா ஐயுறுகின்றான்.

இப்படிக் கம்பன் சிந்தனை விந்தைச் சுழலிடையேவந்த இராகவன், சீதையைக் கண்டு விடுகின்றான். அவர்கள் "கண்ணொடு கண்ணினைக்கௌவி ஒன்றையொன்று உண்ணத் தொடங்கின! உணர்வு ஒன்றியது (கம்பன் உணர்வும் ஒன்றியதுபோலும்) அண்ணலும் நோக்கினான். அவளும் நோக்கினாள்"

அவள் நோக்கு, ஐயன் தோளில் பாய்ந்து மறைந்தது. அதனால் அவன் தோள்கள் விம்மின. இவனுடைய நோக்கு அவள் தனங்கள்மேல் பாய்ந்தது. களிப்புப் பெருமூச்சினுக்கு உள்ளத்தே இடம் தரவேண்டி அவள் தனங்கள் வெளி நோக்கிப் பருத்து விம்மின! "வரிசிலையண்ணலும் வாட்கண் மங்கையும் இருவரும் மாறிப்புக்கு இதய மெய்தினர்" "மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும் ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன்றாயினர்!" இவை யாவும் ஒரு மின்னல் வேகத்தில் நிகழ்ந்தவை! யாரும் சிந்திக்கவும் முடியாத இக்காட்சியில் கம்பன் தன்னைப் பறிகொடுத்து மயங்கினான.

பாட்டின் இரண்டாமடியில் மயங்கி அவன் உள்ளம் கவிதைக் கடலில் மிதந்தது. ஆயிரம் ஆயிரம் அகத்துறைப்பாக்கள் அக்கடல் பரப்பின்மேல் கட்டற்றுப் பரந்தன. அவன் எண்ணம். ஆஹா! இக் காட்சியைக் கண்டும் அம்முதல் நூல் கவிஞன் தன்னை யிழக்காது கதை சொல்லிக் கொண்டே போகின்றானே! ஓர் ஆயிரம் சுலோகங்களிலாவது இதனைப் பேச வேண்டாவா? ஒன்றுமே பேச வில்லையே!

பதிலுரைப்பதுபோல் அம் முதல் நூல் முனிவர் கம்பன் உள்ளத்திலே காட்சி யளிக்கின்றார். கம்பன் நமஸ்கரிக்கின்றான்.

"ஸ்வாமி மன்னிக்க வேண்டும்"

"ஏனப்பா, கம்பர்! என்ன தயக்கம்? எதை மன்னிக்க வேண்டும்"

"ஒன்று மில்லை ஸ்வாமி! இந்தக் காட்சி......கிடைக்காத காட்சி......இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தும் காட்சி. இதனை நீர் காணவில்லையே, பேசவில்லையே என்றுதான் எண்ணினேன்"

"அட பயித்தியமே! நான் கண்டேனடா! கண்டேன். நான் காணுததையா நீ கண்டு விட்டாய். இந்தக் காதலர்களை நான்

முன்பே யறிவேனப்பா! அவன் கருங்கடலில் இவளோடு ஒன்ருய்ப் படுத்து யோக நித்திரை செய்தவன். இப்பொழுது ஏதோ புதுக்காதலர்கள்போல் உனக்காக நடிக்கின்றனர்"

"ஸ்வாமி! அப்படியா?"

"ஆமாமப்பா! எனவேதான் இவ்வுண்மையை யறிந்த நான்
இந்தக் காதல் காட்சியைக் கண்டும்கூடப் பேசாமலிருந்து
விட்டேன்"

வால்மீகி விடுத்த அந்த விடையைக் கம்பன் உதடுகள் முணு முணுத்தன. அச்சொற்களே அப்பாட்டின் பின்னிரு அடிகளாய்

"கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப்பின்
பிரிந்தவர் கூடினுற்பேசல் வேண்டுமோ?"
என உள்ளன ஆம்! ஆம்

இப்புதுக் காதலர்களே கருங்கடல் பள்ளியில் முன் கலவியிலிருந்தவர்கள். பிரிந்து வந்துள்ளனர். இப்படிப் பிரிந்து வந்தவர்கள் என்பதை முனிவன் வால்மீகியறிவன். எனவேதான் இக்காட்சியையோஅதன் உணர்ச்சிகளைப்பற்றியோ அவன் பேசவேயில்லை!! என்று பேசிய கம்பன் உள்ளத்து வால்மீகி,

"கம்பா! நீ இந்த முன் விவகாரங்களெல்லாம் அறியாததே நன்மை. இக்காட்சி உன் உள்ளத்தை ஈர்த்து அதனுள் ஒரு கவிதைக் கடலைக் கொந்தளிக்க வைக்கின்றதல்லவா? நீ பாடு - அப்பாக்கள் முதல் நூலின் உள்ளோட்டங்களேயாகும். அன்றியும் இறைக்காதல் வெள்ளத்தமுந்திய அருளாளர்கள் வாக்கெல்லாம் உன்னிடம் தோன்றும். பாடு என்று கூறி மறைந்தார்.

இந்தக் கற்பனையில் இப்பாட்டை மறுபடியும் கண்டு மேலே செல்வோம்.

"மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய ஈருடற்குயிரொன்ருயினர்;
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்பின்
பிரிந்தவர் கூடினுற் **பேசல்** வேண்டுமோ?
என்று" வால்மீகி

பேசாது சென்ருன்! நான் பேசுகிறேன்!' என்று மற்றும் ஒரு பாப் பாடி இப் படலத்தை முடித்த கம்பன் உள்ளத்து எத்துணை

ள் த்துணைப்பாக்கள் பீறிட்டெழுகின்றன. அவ்வாறெழுந்த "கைக கிளைப் படலம்" "கார்முகப் படலம்" "வரைக்காட்சி" "பூக்கொய்" "உண்டாட்டு" "உலாவியல்" முதலிய படலங்களில் ஒரு மாபெருங் கவிஞனேயன்றி இறைக் கவிஞன் (Mystic poeit) ஆக வும் நாம் கம்பனைக் காண்கிறோம். ஈண்டு அவைகளில் ஓரிரண்டு பாக்களை மட்டுமாவது கண்டு இக்கட்டுரையை முடிப்போம்.

இறைவனைக்கண்டு அளவளாவுவர் இறைக்கவிகள் (ஆழ்வார் கள்-நாயன்மார்கள்). ஒரு கணம் பிரிந்தாலும் சகியார். அப்படிப் பிரிந்த நிலையில்தான் அவர்கள் அவ்வுத்தம நாயகன் பிரிவை (விச் லேஷம்)ப் பேசும் பாக்களில் கம்பன் ஈடுபட்டவனே! கம்ப நாட்டாழ்வாரல்லவா? ஆழ்வார்கள் வழிவந்தவன்தானே! முதல் நூல் வழி விலகியேனும் ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொள்கிறான் போலும்!

"மரகதப் பெருங்கல்லெனு மிகுபுயம் கமலக்கண்ணெனும் வில்லுடனிழிந்ததோர் மேகமென்று" தோன்றிமறைந்த அழகன் "மண்வழி வந்து" அவள்முன் நடந்து அடிவருந்தப் போனவன் தான்! அப்படியே வாளாச்சென்றிருக்கக் கூடாதா? என்கண் வழி நுழைந்த அக்கள்வன் என் "பெண்வழி நலனும், (உடன்) பிறந்த நாளையும், என்பழியுணர்வையும்" களவாட வேண்டுமா? போனவன் அன்று ஆழ்வார் நாயகிக்கு உரைத்ததுபோல் ("புனல நங்கமூர் என்று போயினனே!") ஊரையாவது சொல்லிப்போகி யிருக்கக் கூடாதா?" என்றெல்லாம் காதல்விடம் தீண்டிய தலைவி யுள்ளம் தடுமாடுகின்றது. மாலை வந்தது! அந்தியைக்கண்ட தலைவியின் சிந்தனைகளைச் செதுக்குகின்றான் சிற்பி கம்பன்.

மெதுவாக இருள் புகைபோல் திரண்டு பரவத் தொடங்கு கின்றது. "ஆம்! நஞ்சு கருமை நிறமல்லவா! அவன் பிரிவென் னும் நஞ்சுதான் இப்படிப் படர்கின்றதுபோலும். அவன் பிரி வென்னும் நஞ்சு உலகத்தையெல்லாமா இப்படி வாட்டும்? இருக் காது! ஒருவேளை கடல் கொந்தளித்துத் தன் கருநீல நீரினால் நலத்தை மூட முந்துகின்றதோ? அதுவுமிருக்காது; நீர் புரண் டெழும் ஒலியில்லையே. ஒருவேளை அவன் பிரிவாகிய இரணத் துக்குக் காலன் அவன் நிறத்தை அஞ்சனத்தில் குழைத்து அவன் பிரிவால் புண்பட்ட உலகத்தின்மேலும் கீழும் மெழுகுகின் றானோ? அப்படியுமிருக்காது. எல்லோரும் அவனை நினைக்கலாம்! ஆனால் அவன் பிரிவால் எல்லோருமே புண்ணுவார்களா?

ஆம்! அவனை எல்லோரும் நினைக்கலாம். அவன் குணத்தை நினைந்து நினைந்து உலகமே அவன் மயமாயிற்று என்று முதல் நூல் "ராமோ ராமோ ராம இதிப்ராஜானும் அபவத் கதா; ராமபூதம் ஜகதபூத்" எனப்பேசியதே. அப்படி எல்லா உயிர்களும் அந்த ஐயன் நீலமேக ச்யாமள மேனியை எண்ணுகிறார்களோ? அப்படி அவன் வயப்பட்டு அவன் வண்ணத்தை எங்கும் கண்ட

ஒரு ஆழ்வார் நாயகி "மேகங்களே! உரையீர்! திருமால் மெய்யொக்கும் யோகங்கள் எவ்வாறு பெற்றீர்?" பேசினளே! ஆம் அப்படித் தானிருக்கும்! எல்லோருமே அவன் நீல நிறத்தைப் நினைப்பதால் அவ்வெண்ணக் கூட்டமே உலகெலாம் பரவுகின்றது போலும்!

இப்படி யெல்லாம் கம்பன் அவ்வுத்தமத் தலைவி மருங்கிலா நங்கையின் உள்ளச் சுழல்களை உருவாக்கும் அழகைத்தான் காணுங்கள்.

" ஆலம் உலகில் பரந்ததுவோ ?
ஆழிகிளர்ந்ததுவோ ? அவர்தம்
நீலநிறத்தை எல்லோரும் நினைக்க
அதுவாய்நிரம்பியதோ ?
காலன்நிறத்தை அஞ்சனத்தில்
கலந்துகுழைத்து ஆகாயத்து
மேலநிலத்து மெழுகியதே ?
விளக்கும் இருளாய் விளைந்ததுவே !

இப்படி முதல்நூல் சுவட்டில் மாறிய கம்பனளிக்கும் உன்னதக் கற்பனைகள் முன்கூறிய படலங்களில் நூற்றுக்கணக்காகக் கண்டு மகிழும் அறிஞர்கள் 'இராம காதையில் வேறெங்காவது மாறுகிறுனு? இந்த அமுதம் கிடைக்குமே' என்று ஆராய்வதில் வியப்பில்லை.

---

# கம்பரது அரசியல் அறிவு

டாக்டர். மா. இராசமாணிக்கனுர்
(சென்னைப் பல்கலைக் கழகம்)

புவியரசேத்தும் கவியரசாய கம்பர் பெருமான் தம் இராம காதையின் கண் அவ்வவ்விடங்களில் அமயம் வாய்க்கும் போதெல்லாம் சிறிதும் மனஞ்சலியாது தாம் உணர்ந்த பல உயரிய கருத்துக்களை நமக்கு விளக்கிக் காட்டுகின்றுர்.

## கொடுங்கோல் அரசர்

நாட்டை ஆளும் நாயகன் எவ்வித இலக்கணத்துடன் இருத்தல் வேண்டும் என்பதைக் கம்பர் விவரிப்பது வியக்கத்தக்கது. குடிகளைத் துன்புறுத்திப் பாக்கு மரத்தை தூக்கு மரமாக்கும் அரசர் அரசரோ? குடிகளின் பெண்டிரைக் கற்பழிக்க முயலும் காவலர் உண்மைக் காவலரோ? தம் மதத்தாரையும் அவர்தம் கோவில்களையும் பாழாக்கும் வேந்தர் உண்மை வேந்தரா? ஒற்றுமையின்றித் தம் குலத்துக்குத் தாமே தீமை விளைவித்துக்கொண்ட 'ஜயசந்திரன்' போன்ற தீயபண்புகள் நிறைந்த மன்னர் மன்னரோ? குடிகளை அச்சுறுத்தி அடக்கு முறையில் ஆளும் அரசர் உண்மை அரசரோ? அம்மம்ம! நாட்டு வரலாற்று நூலைப் படித்தாலன்றோ உண்மை விளங்கும்! அந்தோ! இத்தகைய கொடுங்கோல் மன்னரால் குடிகள் உற்ற துயர்தான் கூறற்கெளிதோ? குடிகள் என் நினைந்து ஏக்கமுற்றனரோ? இத்தகைய அரசர் அரசரல்லர். இனிக் கம்பர் கூறும் அரசனையும் அவரது அரசியல் அறிவு நுட்பத்தையும் கவனிப்போம்.

## அளிப்பவன்

கம்பர் தாம் கூறும் அரசியல் நுட்பத்தைத் தயரதன்மேல் ஏற்றிக் கூறுகின்றுர் என்பது வெள்ளிடைமலை. அரசன் 'அளிப்பவனே' அன்றி 'அழிப்பவன்' அல்லன். துப்பாக்கி முனையிலும் மூங்கிற் கழிகளின் முனையிலும் குடிகளைத் துன்புறுத்தி ஆளும் அரசன் அரசனுகான். "ஆள்பவன் அரசனுகான்—காப்பவனே அரசன்" என்பதே கம்பர் கொண்ட அரசியல் அறிவின் சாரம். அன்பு வழிகாட்ட, அறம் துணை செல்லக் குடிகளுக்குத் தொண்டு பூண்டு ஒழுகுபவனே உண்மை அரசன். அவன் தன் கடமைகளை உள்ளவாறு உணர்ந்திருத்தல் வேண்டும். குடிகளைக் காப்பதற்குரிய நற்குணங்களே முதலில் அரசன் பெறத்தக்கவை. இவை

சிறிதளவும் குன்றாது நிறைவுற்று இருத்தல் வேண்டும். இன்ன குணங்களையுடையவனே உத்தம அரசன் என்ற கம்பர் கூற்று, கற்போர் மனத்தைக் களிப்புறச் செய்கிறது.

" ஆதிம் மதியும் அருளும்அறனும்அமைவும்
ஏதில் மிடல் வீரமு மீகையும் எண்ணில் யாவும்
நீதியும் நிலையும் இவை நேமியினோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் இவற்கே பணி கேட்ப மன்னோ "

"தாயெரக்கும் அன்பில்; தவமொக்கும் நலம்பயப்பில்;
சேயொக்கும் முன்னின் றுருசெல்கதி உய்க்குநீரால்;
நோயொக்கும் என்னில் மருந்தொக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்."

—அரசியல் படலம்

அன்பைச் செலுத்துவதில் தாய் இணையற்றவள். அரசன் குடிகள் மீது தாய்போல அன்பைச் செலுத்துகின்றான் எனின், அக்குடிகள் வாழ்வு பெருவாழ்வன்றோ? அவரவர் வேண்டிய வற்றை வேண்டியவாறே பெறத்தவம் உதவி செய்யும். அவ்வாறே மக்கள் வேண்டியவற்றை வேண்டியவாறே பெற மன்னன் துணை செய்வதால் அவன் ஒத்தவனாவான். ஆகவே, அரசன் இரண்டாம் பேறாகிய பொருளுக்கும் காரணன் ஆகின்றான்.

மூன்றாவதாக, தயரதன் 'சேயொக்கும் முன்னின் றுருசெல் கதி உய்க்கு நீரால்' என்றார் கவி. ஒருவன் இம்மைப் பற்றை விட்டு மறுமைக்குரிய நெறியில் பழக மகன் உதவுகின்றான். ஆகவே, தந்தையின் செல்கதிக்கு வழிகாட்டியாய் உள்ளவன் மகனே. அவன் போன்று, தயரதன், மக்கள் அறம் பொருள் இன்பத்தில் ஆழ்ந்துவிடாது மறுமைக்குரிய நிலைமையையும் அவர் செய்ய வேண்டிய சாதனங்களையும் அமைத்து வைத்துள்ளான். இந்நிலையில் அவன், 'குடிகளின் சேய்க்குச் சமமானவன்' என்று கூறுதல் அமைவுடைத்து. நம் கம்பர் காட்டும் அரசியல் நுட்பம் சால அழகியது!

கம்பர், நான்காவதாக, தயரதன் 'நோயொக்குமென்னின் மருந்தொக்கும்' என்கிறார். நோயை உண்டாக்குபவனும் அரசனே. அந்நோயை மருந்து போல் உதவிப் போக்குபவனும் அரசனே. என்னே, கம்பர் காட்டும் அரச நிலை! இந்நிலையில் வள்ளுவர் வாய்ச்சொல் ஒன்று நம் நினைவிற்கு வருகிறது. அஃது.

" பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து"

என்பது.

"சாதாரண நோய்க்கு மருந்து வேறு; இம்மாதரசியால் விளைந்த நோய்க்குத் தானே மருந்துமாகிறாள்" என்னும் வள்ளுவர் வாய்ச் சொல்லேயே சாருக வடித்துக் கம்பர் 'நோயொக்கு மென்னின் மருந்தொக்கும்' எனச் சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார். இக் கருத்தையும் ஒப்பிட்டால், தயரதன் குடிகளின் இன்பத்திற்கு ஆதாரமாய் விளங்கிய பரிசு நன்கு விளங்கும். எனவே அரசனால் விளைந்த நோய்க்கு அவனே மருந்தாக அமைதல் அழகன்றோ? இதனினும் குடிகள் பெறத்தக்க பேறுதான் யாது? இன்பப் பேறு அரசன் நல்க, குடிகள் அதனையடைந்து இன்புறுதல் எத்துணைச் சிறந்தது!

ஆகவே, தயரதன் உலகத்து உயிர்களை, 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் நான்கு பேறுகளையும் அடைவிக்கின்றான். மேலும், நூல்களைக் கேள்வி மூலம் ஆராயுமிடத்து, இன்றியமையாத அவ்வவர் அறிவேபோல் உடன் நின்று உதவுதல் வியப்பினும் வியப்பே! இதனைக் கம்பர், 'நுணங்கு கேள்வி ஆயப் புகுங்கால் அறிவொக்கும்' எனத் தயரதனைப் பாராட்டும் பரிசும் மகிழத் தக்கதே.

தாயாயும், தவமாயும், சேயாயும், அன்பர் தாமாயும், அவ்வவர் அறிவுமேயாயும் தயரதன் தன் குடிகளுக்கு மட்டுமே அமைந்திலன், உலக மக்கள் அனைவர்க்கும் அவன் அத்தன்மையனே என்பதைக் கம்பர், 'எவர்க்கும் அன்னான், என வற்புறுத்திக் கூறுகின்றார்.

குணத்தாலும் நலத்தாலும் உயர்ந்த தயரதன், வேந்தற்குரிய நாற்படையும் நல்லமைச்சும் வேண்டிலன். கைவில்லே அவனது துணை; அறமே அவனைக் காக்கும் கவசம்; மநுவினும் மிக்க நீதியுடையான், எனக் கம்பர் தாம் காட்டிய தயரதனைக் கோசிகன் புகழ்வதாகக் கூறி மகிழ்கின்றார்.

" துணையின்றி உயிர் செல்லச்
சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப்
பகைவென்று படிகாப்போன்
தனுவன்றித் துணையில்லான்
தருமத்தின் கவசத்தான்
மநுவென்ற நீதியான்
மகவின்றி வருந்துவான்."

—குல முறை கிளத்துப் படலம்

## அரசன் இலக்கணம்

அரசியலின் முற்றிய தத்துவத்தைக் கம்பர் காட்டியுள்ள விதம், கற்பவர் மனத்தைக் கனியச் செய்யும். 'அரசனும் குடிகளும் தம்முள் வேறுபாடு இன்றி இரண்டறக் கலந்தனர்' என்கிறார் கம்பர். உடலும் உயிரும் சேர்ந்து மனிதனுவது போன்று, குடிகளும் அரசனும் ஒன்று சேர்ந்து 'அரசியல்' என்ற உருவத்தை அடைகின்றனர். அதனில் அரசன் உடல்; குடிகள் உடலில் தங்கப் பெற்ற உயிர். உயிர் இன்றேல் உடல் ஏது? அங்ஙனமே குடிகள் இன்றேல் கொற்றவன் ஏது? ஆதலின் அரசன் தன் உயிர் போன்ற குடிகளைக் காக்கக் கடமைப்பட்டவன். அவனும் குடிகளும் இரண்டறக் கலந்தனர் என்றால் அந்நாட்டில் இன்பமே இனிய நடம் புரியுமன்றோ? என்னே கம்பர் காட்டும் அரசியலின் சிறப்பு!

" வயிரவான் பூணணி மடங்கல் மெய்ம்பினுன்
உயிரெலாந் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிரிலா வுலகினிற் சென்று நின்று வாழ்
உயிரெலா முறைவதோர் உடம்பு மாயினுன் "

—அரசியல் படலம்

'உலகினில் நின்றுவாழ் உயிரெலாம் உறையும் ஓர் உடம்பாயினுன்' என்பதே கம்பர் காட்டும் விழுமிய அரசியல் தத்துவம். செங்கோலானும் தண்ணளியானும் ஆகிய மன்னன் இருக்கத்தக்க மாண்பு நிலை இதுவேயன்றோ? வேந்தன் உடலானது பற்றித் தன் அழிவிற்கு வழி தேடாது, உய்வதற்கு வழி தேடக் கடமைப்பட்டவனுகின்றான்' எனவே, அவன் குடிகளின் நன்மதிப்பைப் பெற வழிதேடுகின்றான். அவனன்றோ உண்மை அரசன்!

வேந்தன் உடலாயும் குடிகள் உயிராயும் அமைகின்ற வாய்மையை வசிட்டனும் இராமனுக்கு உரைக்கின்றான்.

## வறிஞனும் அரசனும்

வறிஞன் தன் சிறு வயலில் ஒவ்வொரு பயிராய்ப் பார்த்து வளர்க்கும் பெற்றிபோலத் தயரதன் வையத்து மாந்தரை ஒன்று சேர்த்துப் பாராமல் தனித்தனியே கண்காணித்து வருவதைக் கம்பர் கூறுவது கருதற்பாலது:

"வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய் கின்றான்"

என்ற கம்பர் கூற்றுப் படித்து இன்புறத் தக்கதன்றோ? "வறிஞன் தன் வயலில் உள்ள ஒரு பயிர் அழியினும் தனக்கு இழப்பாக எண்ணுவான். அது போலவே, தயரதன் மக்களுள் ஒவ்வொருவரையும் ஊறு அடையா வண்ணம் காத்து வந்தான்," என்று கம்பர் கூறுதல் எண்ண எண்ண உவகை அளிக்கின்றது.

# மயிலைத் தமிழ்ச் சங்கம்

திருமதி' எஸ். கமலா

1. வெள்ளியம்பலத்தே வீற்றிருக்கும் பெருமானார்
தெள்ளித்தான் தேர்ந்திட்ட திருமன்ற மதனுள்ளே
உள்ளித்தமிழோங்க உருவாக்கிய முச்சங்கம்
பள்ளித்தமிழ் வளர்த்த பான்மையதே போலாக,

2. அன்றொருநாள் மயிலைநகர் அமர்ந்திட்ட கபாலியாய்
தென்றலொடு தேன்மணக்கத் திகழ்கற் பகநாயகியும்
சென்றுரைத்த வரமதுபோல் செழித்திடவே
[தோன்றிய
நின்றுபுகழ் நாட்ட மயிலைத் தமிழ்ச்சங்கம்.

3. முதற்சங்கம் கடலாட, இடைச்சங்கம் எழுந்ததுபோல்
அதற்கென்று தோன்றியதோ மயிலைத் தமிழ்ச்சங்கம்
இதமுறவே பணியாற்றி இருந்து மறைந்திடவும்
அதன்பணியைத் தொடர்ந்திடவே எழுந்ததுவே
[இச்சங்கம்.

4. இடைச்சங்கம் போலாக ஏற்றபல பணியாற்றி
தடையில்லாத் தருமவழித் தமிழோங்கிப் பரவிடவே
அடைவாக ஆற்றலுள பெரியோர்கள் பொறுப்பெற்க
இடையேதும் இன்னல்கள் தோன்றாமல் காத்திடவே.

5. சென்றங்குத் தமிழதனைப் பொதுமறையாய்
[மதுரையிலே
பொன்னாது புகழ்நிறுவப் பொற்றாமரைப்
[பொய்கையிலே
நின்றசங்கப் பலகையிலே நிறுத்தியநம் வள்ளுவரும்
அன்றாலிலைப் பாலனுக்காய் அன்போடு அருந்தமிழில்

6. பண்ணோடியற் பாபலவும் பாடியமூ வித்தகருள்
எண்ணாது கண்ணனிடம் ''திருக்கண்டேன்'' எனநின்று
கண்ணார் கேசவனும் மாதவனும் வளர்மயிலைத்
திண்ணார் தலமதனில் தோன்றியபேயாழ்வானும்,

7. எண்ணமுறத் தமிழதனை ஈன்றெடுத்த ஈசனுமே
திண்ணமுற அகத்தியநூல் ஆக்கியகுறு முனிவனுமே
எண்ணமெலாம் தமிழ்வாழ் எனக்கம்பர் விழாக்காணும்
வண்ணமுறு மயிலைத் தமிழ்ச்சங்கம் வாழ்த்திடுவார்.

# இடை பெயரான்

(வித்துவான். பி. தூ. நாதமுனி)

உலகிலுள்ள மக்கள் அனைவரும் தங்கள் மொழியிலுள்ள கவிகளை உயிராகப் போற்றிப் பெருமை அடைகின்றனர். நல்ல இலக்கியம் இல்லாத மொழிகளுக்குச் சிறப்புக் கிடையாது. உலகில் மனிதப் பண்பை அறிவிக்கும் நிலையே இலக்கியம். அத்தகைய சிறந்த இலக்கியத்தை எழிலார்ந்த முறையில் பெற்று மிளிர்கின்றது தமிழ் மொழி. 'அன்பு மொழியாம் அருந்தமிழ் மொழியின்கண் இலங்கும் இலக்கியத்தின் இன்பவளத்தின் அருமை பெருமையினைச் சாற்றிட, நினைத்திட, மதித்திட, அறிந்திடச் சார்கின்றதோறும் வாயெல்லாம் தித்திக்கும், மனமெலாம் இனிக்கும், மதியெலாம் சுவைபொருந்தும், மன்னிய மெய்யறிவெலாம் உருசிபயக்கும். என்னில் இதனால் உண்டாகும் இன்பப்பெருக்கு இயம்பற்கரிதாகும்.

தமிழ் மொழியின்கண் இலங்கும் இலக்கியங்களுள் மிகச்சிறப்புடை இலக்கியம் கம்பராமாயணம் ஆகும். இராமாவதாரத்தைப் பாடுவதற்கென்றே கம்பன் பிறந்தனன் எனத் தோன்றுகின்றது. "கல்வியிற் பெரியன் கம்பன்" என்ற சொல்வழக்கு கம்பராமாயணம் தோன்றிய காலத்திலேயே தோன்றியிருக்கவேண்டும். கம்பன் கவிதை தோன்றிய நாள்முதல் அதனைப் பலரும் பல இடங்களிலும் படிக்கத் தொடங்கித் தமது கல்வியறிவைப் பெருக்கிக் கொள்ளலாயினர். கம்பன் கல்வியிற் பெரியனாதலால், தமிழகமும் கல்விச் சிறப்புடன் இலங்குவதாயற்று. இதனையே தீர்க்கதரிசி எனப் புகழப்படும் பாரதியார்,

'கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு' . — என்ற காரிய காரண முறையில் வைத்து விளக்கிப் பாடியுள்ளார்.

கம்பராமாயணம் ஒரு கல்விக் களஞ்சியம் ஆகும். ஒழுக்கத்தின் உறைவளமும், அறிவின் சிகரமும, கேள்விச் செல்வமும்கொண்ட பெருங்காப்பியம் ஆகும். கவிதைத்தாய் கொலுவீற்றிருக்கும் பீடம் கம்பராமாயணம். செவிநுகர்கனிக் கொத்து ; சிந்தனையின்சுடர். கம்பன் உலகப்பெருங் கவிஞர்களுக்குள்ளே தலை சிறந்தவன். கம்பனுடைய வீறுகொண்ட புலமைத்திறனுக்கும், பரந்த கற்பனைக்கும், கவியின் ஆற்ற

லுக்கும் ஏற்றதாக ஒளியுடன் மிளிர்கின்றது அவனுல் இயற்றப்பெற்ற இராமாயணம். கம்பராமாயணத்தால் தமிழ் மொழி பன்மடங்கு உயர்வும், பெருமையும், மேன்மையும், செழுமையும் பெற்றிருக்கிறது. கம்பருக்குத் தமிழ் மொழியினிடத்தே மட்டற்ற மதிப்பும், அன்பும், பற்றும் அதிகமாக உண்டு. என்றும்உள தென்தமிழை இயம்பி யிசைகொள்ளவே பிறந்தவர் கம்பர். தமிழகத்தினிடத்தில் பற்றுக்கொள்வதில் அவருக்கு நிகர் அவரே ஆவார். கம்பர் தான் பாடிய இராமாயணத்தில், கிட்கிந்தா காண்டத்தில். ஆறுசெல் படலத்தில் தென்தமிழ் நாட்டின் பெருமையைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

'' அத்தி ருத்தகு நாட்டினை அண்டர்நாடு
ஒத்திருக்கும் என்ருல், உரை ஒக்குமோ?
எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்
முத்தும் முத்தமி ழும்தந்து முற்றுமோ ?''

என்ற இப்பாடலைப் பலமுறை நாம் பாடிக்கொண்டே இருக்கலாம். [எல்லாவகையாலும், ஏழுலகத்தாராலும் புகழப்படுகின்ற முத்துக்களையும், (இயல், இசை, நாடகம் என்ற) மூவகைத் தமிழையும், தன்னிடத்திலுண்டாக்கிக் கொடுத்து, பெருமை பெறுதலினுல், செல்வ வளம் விளங்குகின்ற அந்தப் பாண்டிய நாட்டை, தேவலோகமானது ஒத்திருக்கும் என்று கூறினுல் அச்சொல் ஏற்புடையதாகாது என்பது இப்பாடலின் பொருள்.] தமிழகத்தை முதன்முதலில் வாழ்த்திப் பாடிய பாடல் இஃதே ஆகும். தமிழ்நாட்டு வாழ்த்துப் பாடல் பாடிய முதல் தமிழ் மகன் கம்பனே ஆவான்.

இராமாயணப் பாத்திரங்களின் பண்பின் இயல்புகள் யாவற்றையும் உலகியலுக்கும், இயற்கைக்கும் பொருந்தும் முறையில் சித்திரித்துத் தருவதில் கம்பராமரயணம் எழிலார்ந்த தன்மைபெற்று விளங்குகிறது. கம்பர் காவியத்தில் ஒவ்வொரு பாட்டும் ஒரு சுவையுள்ள நாடகக் காட்சியாகத் திகழ்கிறது. இங்ஙனம் கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனது இராமாயணக் காப்பியத்தில் நாடகப் பண்புடன் சித்திரித்துள்ள பகுதிகளுள் இராவணனுடன் இடை பெயராமல் இருந்து, இராவணன் கட்சிக்குள், இடைபெயரான் என்ற முறையில் இருந்து இடைபெயராமலே மீளானுகி இடை பெயர்ந்த கும்பகர்ணனைக் குறித்து விளக்க எழுந்ததே இக் கட்டுரை.

மனித உள்ளம் மிக விசித்திரமான ஒரு பொருள். உள்ளம் கடலைப்போன்றது. இரண்டின் ஆழத்தையும் கண்டவர் இல்லை. இவை செயல்படும் நேரம் அறிவிக்க முடியாதது.

கடலுக்குள் முத்து உள. பயங்கரப் பொருள்களும், மீன்களும் உள. கடல் சலிக்கிறது. உள்ளமும் சலிக்கிறது. உள்ளம் எப்பொழுதும் மோதுகின்றது. இப்படி மோதுதலே வாழ்க்கை. ஒரு சிலர் உள்ளத்தில் துவங்கும் சிக்கல் நிறைந்த ஆட்டத்தை நிறுத்திச் சத்தியத்தைத் தொட்டுவிடுகின்றார்கள். ஓயாத சலிப்பு - நன்மைக்கும், தீமைக்கும் ஓயாத போராட்டம்-உள்ளத்தில் என்றும் நிகழ்கின்றது. இந்தச் சலிப்பில் மோதுகின்றது கும்பகர்ணன் உள்ளம்.

இராவணன் தம்பியர் இருவா. வீடணன் அறத்தோடு சேர இடைபெயர்ந்து விட்டான். கும்பகர்ணன் இடைபெயராதாக இருந்தான், உள்ளப் போராட்டம், ஓயாத பூசல் வடிவினன் கும்பகர்ணன். கும்பகர்ணன் உள்ளத்தில் நன்மைக்கும் நன்மைக்குமே போராட்டம் நிகழ்கின்றது. அண்ணனிடத்தில் உள்ள அன்பு குலத்தின் பாசம், கொற்றத்தினிடத்துள்ள ஈடுபாடு ஆகிய இயல்புகள் யாவற்றையும் கும்பகர்ணனிடத்தில் காண்கின்றோம்.

அனுமனால் எரியூட்டப்பட்ட இலங்கைமாநகரைத் தெய்வத்தச்சன் பிரமனோடுவந்து புதுப்பித்த பிறகு, இராவணன் மந்திரப்படலத்தில் தனது மாட்சி அழிந்தமை குறித்து மந்திரிமாரை நோக்கிப் பேசுகின்றான்.

சுட்டது குரங்கு, எரி சூறையாடிடக்
கெட்டது, கொடிநகர் ; கிளையும் நண்பரும்
பட்டனர், பரிபவம் பரந்தது, எங்ஙனும் ;
இட்டஇவ் அரியணை இருந்தது, என்உடல் ;

என இராவணன் மானம் பேசினான்.

மகோதரன், வச்சிரதந்தன், துன்முகன், பிசாசன், சூரியன் பகைஞன், வேள்வியின் பகைஞன், புகைநிறக்கண்ணன், மற்றுள்ளோர் அனைவரும் இராவணன் மனநிலைக்கு ஏற்பத் தாளம் போட்டார்கள்.

'திக்கயம் வலிஇல ; தேவர் மெல்லியர் ;
முக்கணன் கயிலையும் முரண் இன்றாயது ;
மக்களும் குரங்குமே வலியர்ஆம் எனின்,
அக்கட, இராவணற்கு அமைந்த ஆற்றலே !

இப்படிப் பலர் பேசினர். பின்னர் கும்பகர்ணன் பேசலானான்.

'ஆசுஇல் பரதாரம் அவைஅம் சிறை அடைப்பேம்
மாசுஇல் புகழ் காதலுறுவேம் ; வளமை கூரப்
பேசுவது மானம் ; இடை பேணுவது காமம் !
கூசுவது மானுடரை ; நன்று, நம கொற்றம்,

பரதாரத்தைச் சிறையிலடைப்பதும், புகழை விரும்புவதும் ஒன்றற்கு ஒன்று மறுதலையானதாகும். அவ்வண்ணமே பேசுவதோ தம் நிலைமையினின்று தாழாமையாகிய மானம். ஆதரிப்பதோ மானக்கேடான காமம். இவ்வண்ணம் மாறுபட்ட குணங்களை மேற்கொள்வதனுல் மானுடர்க்குக் கூசவேண்டுவதாக இப்போது நேரிட்டது. இங்ஙனமானபோது நமக்கு வெற்றி எப்படிக் கிடைக்குமென்றனன். மற்றும் ;

" சிட்டர் செயல் செய்திலை; குலச் சிறுமை செய்தாய் ";

என்றும் கும்பகர்ணன் பேசினுன். காவியம் எழுதும் கம்பன், நாடகப் பாங்கில் இதனை எழுதுகின்றுன். இராவணன் தனது இருபது கண்களையும், இங்ஙனம் பேசிய கும்பகர்ணனைப் பார்த்துத் திருப்பினுன். இலங்கை வேந்தன், நீயும் மாறி விட்டாயா? கும்பகர்ணு! எனக் கேட்டான் கண்களால். சகோதர பாசம் கும்பகர்ணனை மாற்றுகிறது. கும்பகர்ணன் பின்பு பேசலானுன்.

மட்டுஅவிழ் மலர்க்குழலினுளை இனி, மன்னு!
விட்டிடுதுமேல், எளியம் ஆதும்; அவர்வெல்ல,
பட்டிடுதுமேல், அதுவும் நன்று' பழிஅன்றுல் ;

எனக் கூறுகின்றுன். அறவழி நில்லாதவர்கள்; ஆனுல் சாதற்கு அஞ்சாதவர்கள் என்றுவது உலகம் கூறும் என்கின்றுன். பின்பு இராவணன் முகத்தில் தெளிவு பிறக்கின்றது. மற்றும் ;

' ஊறுபடை ஊறுவதன் முன்னம், ஒரு நாளே,
ஏறுகடல் ஏறி, நரர் வானரரை எல்லாம்
வேறு பெயராதவகை வேரொடும் அடங்க
நூறுவதுவே கருமம்' :- எனவும் கும்பகர்ணன்

நுவன்றுன்.

கும்பகர்ணன் உள்ளத்தின் ஒரு பகுதி இது.

பின்பு நிகழ்ந்த முதல் நாள் போரில், இராவணன் போர்க்களத்தில் தோற்று வெறுங்கையோடு இலங்கை புக்கான். பாட்டன் மாலியவானிடத்தில் இராம, இலக்குவர்களின் வில்லாற்றலை விளம்புகின்றுன். பின் மகோதரன் வந்து பேசுகின்றுன். பேச்சில் மகோதரன் ;

புல் நுனைப் பனிநீர் அன்ன மனிசரைப் பொருள் என்று
உன்னி, என், உனக்கு இளைய கும்பகருணனை இகழ்ந்தது?
—எந்தாய்!

என இராவணனைக் கேட்டான். மகோதரன் சொல்லிவதை இராவணன் புகழ்ந்து, கும்பகருணனை அழைத்து வரக் காவலரிடம் கூறினுன். காவலர் சென்று உறங்குகின்ற கும்பகருணனைப் பலவாருக எழுப்புவதாகக் கம்பர் பல பாடல்கள் பாடியுள்ளார்.

உறங்குகின்ற கும்பகன்ன ! உங்கள் மாய வாழ்வு
எலாம்
இறங்குகின்றது ! இன்று காண் ; எழுந்திராய் !
எழுந்திராய் !
கறங்கு போல வில் பிடித்த கால தூதர் கையிலே,
உறங்குவாய், உறங்குவாய் ! இனிக் கிடந்து,
உறங்குவாய் !

காவலர்களின் பெருமுயற்சியால் கும்பகர்ணன் எழுந்து வந்துவிட்டான். எழுந்ததும் நிகழ்ந்தவை காவிய விளையாட்டுக்கள். போர் நடக்கிறது என்ருன் இராவணன். கும்பகர்ணனுக்கு அறவுணர்ச்சி நீங்கவில்லை. போர் நேர்ந்தமைக்கு வருந்தி, கும்பகருணன் இராவணனுக்கு,

'ஆனதோ வெஞ் சமம் ? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ ?
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்
போனதோ ? புகுந்ததோ, பொன்றும் காலமே ?

' கிட்டியதோ, செரு ? கிளர் பொன் சீதையைச்
சுட்டியதோ ? முனம், சொன்ன சொற்களால்,
திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை
விட்டிலையோ ? இது விதியின் வன்மையே !

என அறிவுரை கூறுகின்ருன்.

கும்பகர்ணன் அறிவுடையோனுகவும், தம்பியாகவும் காட்சி அளிக்கின்ருன். அறத்தின் வழி நிற்க கும்பகருணனுல் முடியவில்லை. அன்பின் வழி நிற்க இராவணன் மனம் இசையவில்லை. கும்பகர்ணன் வேலை வாங்கினுன். போர்க்களம் செல்லலானுன். அன்பு மேலிடத் திரும்பினுன் கும்பகர்ணன். இராவணனை நோக்கி ;

" வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன் ;
விதி
நின்றது ; பிடர் பிடித்து உந்துகின்றது " என்ருன்.

இதுதான் நாடகப் பண்பு. மற்றும் ;

" பொன்றுவென் ; பொன்றினுல், பொலன்கொள்
தோளியை
"நன்று" என, நாயக விடுதி ; நன்று அரோ ? என்ருன்

னன்று ; நாயக என்ற சொற்கள் கும்பகர்ணனது அன்பு வேகத்தை உணர்த்துகின்றன.

அண்ணனுக்குத் துணையாக அமர் புரிந்து ஆவி துறப்பதைத் தகவுடைத்து எனக் கும்பகர்ணன் போர்க்களம் புகுந்தான். கும்பகர்ணனைப் போர்க்களத்தில் கண்ட இராகவன் அவன் உள்ளத்தில் அறவுணர்ச்சி மோதுதலைக் கண்டு வியக்கின்றான், ஏவலின் படி வீடணன் கும்பகர்ணனைப் போர்க்களத்தில் சந்திக்கின்றான். வீடணனைக் கண்ட கும்பகர்ணன் ;

> ' உய்ந்தனை, ஒருவை போனாய்' என்மனம் உவக்கின்றேன் தன்
> சிந்தனை முழுதும் சிந்த, தெளிவு இலார்போல மீள
> வந்தது என் தனியே,
> ' சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும், தக்கோய்!'
>
> ' மற்று இவ் அரக்கராய் உள்ளோம் எல்லாம்
> எய்கணை மாரியாலே இறந்து, பாழ் முழுதும் பட்டால்
> கையினால்எள்நீர் நல்கி, கடன் கழிப்பாரைக்காட்டாய்;

எனக் கழலலுற்றான்.

இராமனைச் சரண் புகுமாறு வீடணன், கும்பகருணனுக்கு உரைக்கின்றான். இராவணனுக்காக உயிர் ஈதலே தனக்கு ஏற்புடைத்து ; நீ இராமனைச் சேர்,' எனக் கும்பகருணன் உரைத்துப் பின்னும் ;

> உம்பரும் பிறரும் காண, ஒருவன் மூவுலகை ஆண்டு,
> தம்பியை இன்றி மாண்டு கிடப்பனோ, தமைன் மண்மேல் ?
>
> ஆதிநூல் மரபினாலே, கடன்களும் ஆற்றி, ஏற்றி,
> மாதுயர் நரகம் நண்ணுவண்ணமும் காத்தி மன்னோ.

எனவும் கூறி வீடணனை அனுப்புகின்றான்.

போரில் கும்பகர்ணன் இராமபிரானது கணைகளால் தனது அவயவங்களை எல்லாம் ஒவ்வொன்றாக இழந்த நிலையிலும் பெரும்போர் செய்து அலைகழிக்கின்றான். முடிவில் உள் உணர்வு தோன்ற வீடணனைத் தீங்கு இன்றிக் காக்குமாறு இராமனை வேண்டுகிறான். தனது தலையை அறுத்து கடலில் இடுமாறு கும்பகருணன் வேண்ட இராமனும் அவ்வாறே செய்கின்றான்.

அந்திச் செக்கர் வானம் அழகு என்கிறோம். மனித உள்ளத்தின் விசித்திரம்தான் அதற்குக் காரணம். கும்பகர்ணன் பெருமை அந்திச் செக்கர் வானம் போன்றது. அந்திச் செக்கர் வானம் உலகை விழுங்க வரும் இருளைத் தடுக்க முயலுகிறது என்றாலும் கவிந்து வரும் இருளுக்குப் பணிந்து அழிந்துபடு

கின்றது. இது இயற்கை நியதியன்றோ? அதே போன்று கும்பகருணன் தன்முன்னவனுக்குப் பல நீதிகளை எடுத்துப் புகன்றான். எனினும் அழிவை நோக்கி அடியெடுத்து வைத்துக் கொண்டிருக்கும் இராவணனுக்கு அதனை ஏற்றல் இயலாத தாயிற்று. எனவே செக்கர் வானம் போல் வளைந்து நின்றான் கும்பகருணன். ஆனால் கும்பகருணன் நியாயத்தை, நீதியை முறைமையினை மட்டும் இராவணனுக்குக் கூறினால் போதுமா? கேட்காத பண்பற்றவர்களை விடுத்து நீங்குதலே முறை எனச் சிலர் கூறலாம். ஆனால் இங்குதான் அரக்கனுகப் பிறந்த கும்பகருணனது மனிதத் தன்மை சுடர் விட்டு ஒளிர் கின்றது. உலகில் தவறு செய்யும் உறவினரைத் திருத்தமுற் படுகிறோம். அதிலும் மிக நெருங்கிய சகோதரர்களுள் தவறு செய்பவன் மேலும் மேலும் செய்தாலும் அவனுக்கு அறிவுரையை இடையீடின்றிக் கூறிச் சலிக்காது அவனுடன் நெருங்கி இருப்பவர்களையே இந்தச் சமுதாயம் புகழ்கின்றது. அதுவே உயர்ந்த பண்பாடு எனவும் எடுத்துரைக்கின்றது.

அறத்தைக் கூறிக் கேட்டகாவிடின் ; "நீ! எக்கேடு கெட்டுப்போ", எனறு கூறி விலகிவிடுவதைப் பாமரமக்களும் வாழ்வில் பழிப்தற்குரியதாகவே கருதுகின்றனர். 'அற்றகுளத்தின் அறுநீர்ப் பறவை யொப்ப',இராவணனுக்கு அழிவு நேரும் என நன்கு உணர்ந்தும், அது தனக்கும் உண்டு எனத் தெரிந்தும், அவனை விடுத்து நீங்காதிருத்தல் கேவலம் உணவு உண்ட நன்றியால் மட்டும் அல்ல, உடன் பிறந்த பாசம், இரத்தபாசத்தின் ஒரு உயர்ந்த தியாகம். இவையும் அங்கு மிளிர்வதை நன்கு உணரலாம். நன்றிமறவாத தன்மை மட்டும் உடைய ஒருவன் தன்னை ஆதரித்தவனுக்கு நீதியை எடுத்துக் கூறவும் அஞ்சக்கூடும். ஆனால் எத்தகைய சீரியமுறையில்?

என்று ஒருவன் இல் உறை தவத்தியை, இரங்காய்,
வன்தொழிலினய், மறைதுறந்து, சிறைவைத்தாய் ;
அன்று ஒழிவதாயின, அரக்கர் புகழ் ; ஐய !

என அறுதியிட்டுரைக்க முடியும். அந்த உறுதிக்குப் பின்பும் அண்ணனுக்காக அமர்க்களத்தை அடைகின்ற பண்பு எழில் பெற்ற மிகச் சிறந்த மனிதப் பண்பாகும் அதனை மேற்கொண்டவன் கும்பகருணன். இப் பண்பின் ஒளித் தன்மையையே 'இடைபெயரான்' எனற தலைப்பு விளக்குவதோடு கும்பகர்ணனது மாட்சிக்கே இடை பெயராத தன்மை-சாட்சியாகக் காட்சி தந்து ஆட்சி செய்கிறது.

# அரக்கி காணும் ஆண்டவன்

(திருமதி. வித்துவான் எஸ். விஜயலட்சுமி)

கல்வியிற் சிறந்த கம்பன் யாத்துத்தந்த கம்பராமாயணக் கடலில் கணக்கற்ற முத்துக்கள் உள்ளன. எவற்றைப் போற்றுவது! எவற்றை விடுப்பது! கருத்துக்கள் யாவுமே மணிகளாக நிறைந்திருப்பின் களைவது எங்ஙனம்? கம்பனைப் பற்றிக் கூற வார்த்தைகளே இராமல் அவன் அவதரித்தமையால் தமிழகமே தனிச்சிறப்புப் பெற்றது என்று பொருள் பட "புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு" எனப் பாரதியாரும் போற்றுகிறாரெனில் கம்பனின் கவிச்சிறப்பை எவ்வாறு போற்றுவது! சொற்களேகிடையா. அவன் ஆக்கித்தந்த அருமையான படைப்பினைப் படித்துப் படித்து ரசித்து நயத்திலும் கற்பனையிலும் மூழ்கித் திளைப்போமேயன்றி நா எழப்பெறோம். கம்பர் காட்டும் பெண்கள், கற்பின் உறைவிடம். அன்னையர், போற்றுதற்குரிய தெய்வங்கள். தயரதனே காணக்கிடைக்காத புத்திர பாசம் நிரம்பிய தந்தை. அமைச்சர்களோ அறவழி நின்று அரசர் நெறி பின்பற்றிய தகைமையர். காவியத் தலைவனான அண்ணல் இராமனோ தாய் சொல் தட்டாத தனயன். தந்தை வழி போற்றுபவன். சோதரரை உயிராய் நேசிப்பவன். நண்பரோடு இரண்டறக் கலப்பதில் வல்லவன். தன் தேவியன்றிப் பிற மாதரைக் கண்ணெடுத்தும் நோக்காத ஏகபத்தினி விரதன். அவ்விராமதூதனோ என்றென்றும் சிரஞ்சீவியாய் வாழ்த்தப் பெறுபவன். ஊணபனுக்குரிய குணங்கள் உறைவிடமாய் தூதர் இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டாய் விளங்குபவன். ஆகவே எப் பாத்திரத்தை நாம் புகழ்வது! வியப்பது!. கம்பன் யாவரையுமே உன்னத நிலையில் உவகை ஒட்டிய முறையில் பழுதறு முறையில் படைத்துள்ளான். ஆங்காங்கு காணும் அணிகளும் நயங்களும் நம்மைப் புல்லரிக்கச் செய்கின்றன. மானிடனாகத் தோன்றினாலும் ஸ்ரீராமன் கம்பன் சொற்களால் தெய்வமாகத் தோன்றுகிறான். தெய்வமாக விளங்கினாலும் மேற்கொள்ளும் நெறியையும் வெளிப்படுத்தும் சொற்களையும் ஆராய்ந்தால் மானிடனாகத் தோன்றுகிறான். இவ்வாறு நயம்பட அள்ளிக் கொடுத்துள்ள இராமாயணக் கடலில் உள்ளத்தைத் தொடாத பகுதியே இல்லை எனலாம். காவியத் தலைவனும் இராமனைக் கம்பர் பல்வேறு கோணங்களில் சித்தரிக்கிறார். அனேக அணிகளைப் பூட்டி, அழகு படுத்துகிறார். பலராமன் சீதாராமன், ரகுராமன் கல்யாணராமன் அயோத்திராமன் எனப் பல இராமர்களைப் படைக்கிறார். அவை யாவற்றையும் தன் கூற்றாகக் கூறுவதைக் காட்டிலும் உபபாத்திரத்தின் வாயிலாக உயர்த்துவது

காப்பிய நுணுக்கமன்றோ! ஒரு தாய்க்குத் தன் மகன் சான்றோன் என்பது தெரிந்திருந்தாலும் பிறர் வாயிலாகக் கூறக் கேட்கையில் தான் கரைகாணு இன்பம் காண்கிருள் என்பதை வள்ளுவன் வாக்கிலே காண்கிறோம். அவ்வாறே கம்பரும் இராமபிரானின் அங்கங்களழகைத் தான் கூறுவதை விட அவனைக் கண்டோா கூற்றாகக் கூறி மிகைப் படுத்துவதைத்தான் சூர்ப்பணகைப் படலத்தில் காண்கிறோம்.

அரக்கியர் குலத்தில் தோன்றி அவலட்சணம் நிரம்பியவளாய் மானிட ஊனைத்தின்று வாழும் கொடியவளான சூர்ப்பணகை அழகே திரண்டு வந்த உருவான இராமனைக் காண்கிருள். திகைத்து மயங்கி நிற்கிருள். மனம் மயங்குகிறது. இத்தகைய அழகு வானவன் யார்? என வினு எழும்புகிறது. மன்மதனே! இல்லை அவனுக்கு வடிவமில்லை. தேவர் தலைவன் இந்திரனே! இல்லை. அவனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு. முப்புரமெரிந்த சிவபிரானே எனில் அவனுக்கு முக்கண்கள் உண்டு. நாபியினின்று உவகை உண்டாக்கிய திருமாலுக்கோ தோள்கள் நான்கு. ஆயின் இவன் யாராயிருக்கக் கூடும் என மயங்குகிருள். சிவபிரான் சாபம் பெற்றபின்-மேன்மேலும் தவம் செய்து முன்னினும் அழகைப் பெற்று வந்த மன்மதனே என ஐயுறுகிருள். விடை காணுத நங்கை அவன் அங்கங்கள் ஒவ்வொன்றையும் ஆராய்கிருள்.

அண்ணலின் அழகிய கைகள் இலக்கணப்படி பொருந்தி முழந்தாளளவு நீண்டு எழிலின் உருவமாய் நின்றன. அவற்றைத் திக்குகளைத் தாங்கும் யானையின் துதிக்கைகள் என எண்ணுகிருள்.

பரந்த தோள்களைக் காண்கிருள்.

“ வின்மலை வல்லலவன் வீரத் தோளொடுங்
கன்மலை நிகர்க்கில கனிந்த நீலத்தி
னன்மலை யல்லது நாம மேருவும்
பொன்மலை யாதலாற் பொருவ லாதென்பாள் ”

—தோள் கண்டார் தோளே கண்டார் அல்லவா! வலிமை நிரம்பிய புயத்திற்கு எவற்றை ஒப்பிடுவது! கல்மயமான சாதாரண மலைகளும் எளிதாகிவிடும். நீல மணி மலையே ஒப்பாகும் என்கிருள்.

மன்னனின் மார்பை நோக்குவாள். செந்தாமரை மலரின் இதழ்களை ஒத்த கண்களையும் மலைபோலச் சிறந்து தோன்றும் காட்சியையு முடையவனுன் அவனது தோளோடு தோளைத் தொடாச்சி யாகப் பார்க்கு மிட்த்து கண்கள் நீண்டன வல்ல.

அழகிய முகத்தை நோக்குகிருள். உருகுகிருள். ஒளியுடைய சந்திரனுக்கு ஒப்பாகுமோ! ஆகாது ஏனெனில் சந்திரன் தேய்வான். முழுமையுடைய மதியோ எனின் பொருந்தாது

மதிக்கும் களங்கமுண்டு. ஆனால் இவன் முகத்திலோ களங்கத்தின் சாயலுமில்லை. முறுக்கு விரிந்த தாமரை மலரோ! எனப் பல்வேருகப் போற்றுகிருள்.

அண்ணலின் அடிகளை ஆராய்கிருள் அரக்கி. பூமி தேவியின் பெண்மையைக் கண்டு பூரிக்கிருள், பூமியில் முளைக்துள்ள புற்கள் இராமனது திருவடிகள் படுதலால் அப் பூமி தேவிக்கு அழகிய மயிர்கள் சிலிர்த்தனவற்றை ஒக்கும் என்று உன்னுவாள்.

இறைவனின் இதழ்களில் பவழத்தினும் மேம் பட்ட செம்மையைக் காண்கிருள். இடையைக் கணடு பட்டாடையை விட மரவுரி செய்துள்ள தவத்திஜ வியக்கிருள்.

இறுதியாக மேனியின் நல்லிலக்கணத்தை ஆராய்கிருள் அணங்கு.

'' ஏந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான் முகன் பழிப்புற் றுனரோ
விரந்திவ னிணபடிப் பொடியு மேற்கிலப்
புரந்தர னுலகெலாம் புரக்கின் றனென்ருன் ''

ஒன்ருேடொன்று ஒத்த திருவடிகளின் துகளுக்கும் ஈடாகப் பெற்ற இந்திரன் உலகு எல்லாம் ஆளுகிருன். உத்தம விலக்கணங்களை யெல்லாம் நிரம்பப் பெற்றுள்ள இராமன் ஓராட்சியுமின்றி வனத்தில் வசிக்கின்ருனுதலால் சாமுத்ரிகா லக்ஷணத்துக்கு ஏற்ப அவரவர் பயன்படுமாறு படைத்தல்தொழிலை மேற்கொண்ட பிரமன் இவ்விஷயத்தில் தவறிழைத்து விட்டான் என்று கூறிப் பாராட்டுகிருன். இங்ஙனம் அணு அணுவாக ஆண்டவனைக் காணும் வாய்ப்பை சூர்ப்பணகையின் தவப்பயனுய், படித்து மனக் கண் முன் கொணரும் நாம் செய்த தவப்பயனுய், சித்தரித்துக் காட்டும் கம்பரின் கவிச் சிறப்பினை, மேன் மேலும் படித்து உணரலாமேயன்றி வார்த்தைகளால் எடுத்துரைக்க இயலாது.

# கம்பன் கண்ட உண்மை

(வித்வான். விஞ்சிமூர், கே. தாத்தாச்சாரி)

முன்னோர்களால் நமக்குக் கொடுக்கப்பட்ட நூல்கள், ஆராயப்படும்பொழுது அவை உண்மைப் பொருளையும் அதனைப் பெறுவதற்குரிய வழியையும் உணர்த்துவனவாகவே இருக்கும். உண்மைப் பொருளை ஆராய்ச்சி செய்கின்ற முறையில்தான் வேத வாக்கியங்களும் அறிவாளிகளால் பயன்படுத்தப் படுகின்றன. அவ்வாறு துணியப்பட்ட உண்மைப் பொருளை அடைவதற்குரிய சிறந்த வழியை அறிவதற்கும் முன்னோர்கள் முயன்றுள்ளனர். இத்தகைய முயற்சிகளின் பயனாக எழுந்த நூல்களே நமக்கு உண்மைப் பொருளையும் அதனை அடைவதற்கு உரிய வழியையும் அறிவிப்பனவாய் உள்ளன. இத்தகைய சிறந்த நூல்களை வெளியிடுவதற்கு இறைவனது அருளும் வேண்டற்பாலது என்று முன்னோர் துணிந்துள்ளனர்.

அறிவாளிகளான முன்னோர்கள் எந்த நூலை இயற்றினாலும் அதன் சுருக்கத்தை முதலில் கூறியிருப்பர். வியாசர் இயற்றிய மகாபாரதம், வால்மீகி இயற்றிய இராமாயணம் முதலியவற்றில் இத்தன்மையை நாம் காணலாம். அதே முறையில் கம்பரது இராமாயணமும் அமைந்துள்ளது. கம்பராமாாணத்தில் முதற் செய்யுள்,

உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரணுங்களே.— என்பதாம்

இதன் பொருள் 'உலகங்கள் எல்லாவற்றையும் படைத்தலும், அவற்றைக் காத்தலும், அழித்தலும் ஆகிய இச்செயல்கள் தவிர இவைபோல் எண்ணற்ற அருஞ்செயல்களை விளையாட்டாகவே செய்பவர் எவரோ அவரே நமக்குத் தலைவர்; அத்தகைய தலைவருக்கு நாங்கள் காவல் புரிவோம்;—என்பதாம். இதில் உள்ள நயத்தை நாம் பார்ப்போம்.

இறைவனின் இலக்கணத்தை ஒரு வகையால் நாம் அறியுமாறு கூறப்புகுந்த மறையவனிடமிருந்து இவ்வுலகங்கள் தோன்றினவோ, தோன்றிய இவ்வுலகங்கள் எவனால் வாழ்கின்றனவோ, இவ்வுலகங்கள் அழியும்போது எவனிடம் சென்று பொருந்துகின்றனவோ அவனே முதற்பெருங் கடவுள் என்று கூறுகிறது. இத்தகைய செயல்களைச் செய்யும்போது இறைவனுக்குச் சிறிதா

வது வருத்தம் தோன்றுமோ எனின், அன்று. இவற்றை விளையாட்டாகவே அவன் செய்பவன். ஏனெனில் அவனுடைய ஆற்றல் அத்தகையது என்பதை மறை, மற்ருேர் இடத்தில் "இந்த இறைவனது ஆற்றல் பலவகைப் பட்டது; இயல்பான அறிவும், வன்மையும், செயலும் நம்மால் அளத்தற்கு இயலாதனவாயுள்ளன." என்று கூறியுள்ளது. இதனையே வள்ளுவரும் 'எண்குணத்தான்' என்ற சொற்ருெடரால் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய சிறந்த ஆற்றல் உள்ளவனையே இறைவனாக வேதவியாசரும் குறித்துப் போந்தனர்.

எனவே இங்கு கம்பனும் உலகங்களைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் சிறிதும் வருத்தமின்றி விளையாட்டாகவெ செய்யும் இறைவனைத் தன்னைக் காப்பவனாகக் குறிப்பிட்டுன்ளார். உலகங்களைப் படைப்பவன் பிரமன் என்றும், காப்பவன் திருமால் என்றும், அழிப்பவன் சிவபெருமான் என்றும் கூறப்பட்டுள்ளதே எனின், பரம்பொருளாகிய திருமாலே காத்தற்ருெழிலைத் தான் ஏற்றுக்கொண்டு பிரமனையும் சிவபெருமானையும் கொண்டு படைத்தலையும், அழித்தலையும் நடத்துகின்ருன் ஆதலின் இவனே முத்தொழிலையும் செய்பவன் என்று கொள்ளப்பட்டது. "அரன் அயன் என உலகழித்து அமைத்துளளே" என்பது ஆன்ருேர் வாக்கன்ருே, இத்தகைய சிறந்த ஆற்றலைப்பெற்ற இறைவனுக்கு அழகான திருமேனி உண்டு

அத்திருமேனியழகில் நாம் ஈடுபட்டால் நாம் நம்மை மறந்து அவனுக்கு என்னவருகிறதோ என்று கருதி அவனை வாழ்த்தத் தொடங்கிவிடுவோம் என்று ஆன்ருேர் பணிப்பர். இக்கருத்தை "அன்னவர்க்கே சரண் நாங்கள்" (அதாவது அந்த இறைவனுக்கு நாங்கள் காவலாவோம்) என்ற தொடரால் குறிக்கின்ருன்.

உண்மைப் பொருளாகிய இறைவனைப் பெறுவதற்கு அவனையே தஞ்சமாகப்பற்றி அவனை வாழ்த்துவதே சிறந்த வழி. எனவே இங்கு முதற் செய்யுளில் கம்பன் உண்மைப் பொருளின் தன்மை, அதனை அடைவதற்குரிய சிறந்தவழி ஆகிய இரண்டையும் கூறுகின்ருன். எனவே கம்பனுல் இயற்றப்படும் இராமாயண நூல் முழுவதிலும் உண்மைப் பொருளாகிய இறைவனும் அவனை அடைவதற்குரிய சிறந்த வழியுமே நுவலப்படுகின்றன என்பது போதரும். இதனைச் சிறிது விரித்துக் காண்போம். வேதங்கள், முதற்கடவுளையே பரவவேண்டும்; ஏனெனின் அவனே நமது பாவங்களைப் போக்க வல்லவன்; பாவங்களே உயிர்கள் இறைவனை அடைவதற்குத் தடையாயுள்ளவை; என்று கூறுகின்றன. இறைவனைத் தவிர வேறொருவரும் உயிர்களின் தீவினைப் பயனைப் போக்க இயலாதவர். ஆதலால் இறைவனைத் தவிர்ந்த தேவர்கள் புகலாகப் பற்றப்படத்தக்கவரல்லர். எனவே முழுமுதற்கடவுளே புகலாகப் பற்றப்படத் தக்கவன். இப்பொருளை இறைவன்

கண்ணபிரானுக அவதரித்திருந்த காலத்தில் அருச்சுனனைக் குறித்து "என்னொருவனையே நீ புகலாகப் பற்று. உன்னுடைய எல்லாப் பாவங்களினின்றும் உன்னை நான் விடுவிக்கின்றேன். வருந்தாதே" என்று கூறியதிலிருந்து விளங்குகின்றதன்றோ? வள்ளுவரும்,

*தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்*

*மனக்கவலை மாற்றல் அரிது*

என்பதனுல் வெளியிட்டார். எனவே உலகங்களைப் படைத்துக் காத்தழிக்கும் தேவனே முதற்கடவுள் என்ற உண்மைப் பொருளும், அவனை அடைவதற்குரிய சிறந்தவழி அவனடி சேர்தலே அல்லது அவனையே தஞ்சமாகப்பற்றி அவனுக்கு என்வருகிறதோ என்று பரிந்து அவன் புகழையே இடைவிடாமல் நினைத்தும் சொல்லியும் இருப்பதாம், என்றும் அறிகிறோம்.

வால்மீகியும் முதற் சருக்கத்தில் நாரதர் தனக்குச் சொல்லுவதாக உள்ள இடத்தில் "உயர்ந்த தோள்களை உடையவன்; நீண்ட கைகளை உடையவன்; நல்ல கன்னங்கள் உள்ளவன்; நெற்றி, மார்பு முதலியவை நன்கமையப் பெற்றவன்; உறுப்புக்கள் இருக்க வேண்டிய முறைப்படி அமைந்தவன்; கண்டவுடன் காதல் கொள்ளும் தன்மையுற்றவன்; இன்னும் பல திருமேனி அழகுகளைக் கொண்டவன் இராமபிரான்" என்று குறிக்கின்ற இடத்தில் பரம் பொருளான இராம பிரானின் திருமேனியழகை முதலில் குறித்தார். சாந்தோக்ய உபநிடது "சூரிய மண்டலத்தினுள்ளே இருக்கும் இறைவன் யாவரும் விரும்பத் தக்க அழகான திருமேனியுள்ளான்" என்று குறித்தது. அதே கருத்தை வால்மீகியும் இங்குக் குறித்தார். மேலும் உலகங்களையெல்லாம் காப்பவன் என்றும், அறத்தை நன்கு காப்பவன் என்றும் தனது தருமத்தைக் காப்பவன் என்றும், தன்னையடைந்தவர்களைக் காப்பவன் என்றும் குறிக்கிறுர். இதனுல் பரம்பொருளைப் பெறுவதற்குச் சிறந்த வழி அவனைப் புகலாகப் பற்றுவதே என்பதும், போதரும்.

இப்பொருளுக்குச் சான்ருக இராமாயணத்தின் உள்ளே சில வரலாறுகளைக் காண்போம். முதலில் தசரதர் மகப் பேற்றிற்காகச் செய்த வேள்வியில் தமது பாகத்தைப் பெறுவதற்காகக் கூடிய தேவர்கள், நாங்கள் கொடுத்த வரங்களின் வலிமையினுல் தம்மையே துன்புறுத்தும் இராவணனைக் கொள்வதற்காகப் பரம்பொருளாகிய திருமாலையே சரணம் புக, பிரமன் சிவன் ஆகியோர்களால் அடக்க முடியாத இராவணனை ஒரு சாதாரண மானிட உருவத்தில் தோன்றி அழிப்பதாக அவர்களுக்கு வாக்குக் கொடுத்து அவ்வாறே செய்தும் முடித்தான் திருமால். எனவே திருமாலே பர தெய்வம் என்றும், நம் துன்பங்கள் நீங்குவதற்கு அவனையே புகலாகப் பற்றவேண்டும் என்றும் விளக்கப் பட்டது.

அடுத்தபடியாத விசுவாமித்திர முனிவர் இராம பிரானைப் பெற்றுச் சென்று தம் வேள்வியை முடித்து இன்புற்றுர் என்று பார்க்கிறேம். அடுத்த படியாக இராம பிரான் ஆள வேண்டிய ஆட்சியைத் தன் தலையில் வைத்ததை எண்ணி வருந்திய பரதன் இராம பிரானைச் சரணமாகப் பற்றி அவனது பாதுகைகளில் அந்த பாரத்தை வைத்துத் தனிசுமை நீங்கப் பெற்றுன். அடுத்தப்படியாகத் தண்டக வனத்தில் இருந்த முனிவர்கள் இராம பிரானைப் பற்றி வாழ்த்தித் தங்களைத் துன்புறுத்தும் கரன் தூஷணன் முதலான அரக்கர்கள் இராமனுல் கொல்லப்படும்படி செய்தனர்.

அடுத்தபடியாக விபீஷணன் இராமபிரானை முறையாகப் பற்றித் தன் துன்பம் நீங்கப் பெற்றதையும் காண்கிறேம் எனவே இராமாயணம் முழுவதிலும் கம்பன் நமக்கு அறிவிப்பதாகிய உண்மைப் பொருளின் தன்மையையும், அதனை அடைவதற்குரிய சிறந்த வழியையும் முதற் செய்யுளிலேயே சுருக்கமாகக் கூறி விட்டான். இராம பிரான் பரதெய்வமோ எனின், இராவணனைக் கொன்றதன் பிறகு பிரமன் இராமன் முன்தோன்றி,

"சொன்ன நான் மறை முடிவினில் துணிந்த மெய்த் துணிவு
நின்னலாதில்லை நின்னின் வேறுளதில்லை நெடியோய்"

என்றும்,

"எனக்கும் எண்வகை ஒருவற்கும் இமையவர்க் கிறைவன்
தனக்கும் பல்பெரு முனிவர்க்கும் உயிருடன் தழீகய
அனைத்திறுக்கு நீயே பரம்; என்பதையறிந்தார்.
வினைத்துவக்குடை வீட்டரும் தனை நின்று மீள்வார்"

என்றும் கூறுவதாக உள்ள செய்யுட்களால் அறியலாம்.

# கம்பன் கவியமுதம்

டி. எஸ். ராஜகோபாலன், பி.ஏ., எல்.டி.,
*தலைமையாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி,*
*திருவல்லிக்கேணி.*



தேமருவு பொழிலணவு திருவழுந்தூர் உறைந்துகந்த
மாமருவு வரைமார்பன் வானுயருங் காரனையான்
ஆமருவி யப்பன்றன் அடிபோற்றும் அண்ணல்தனிப்
பாமருவும் இராமகதை பான்மொழிக்கோர் அணியாமே. (1)

ஆதித்தன் உரமெழுந்த அருஞ்சுடராங் கம்பனவன்
ஆதித்தன் மரபெழுந்து மாதைனைத் தான்நாடி
ஆதித்தன் உரமெழுந்த அரிதன்னை நட்டானை
ஆதித்தன் புகரெழுந்த அருங்கவியாற் பரவினனே, (2)

மறைதந்த பிரணவத்தின் வடிவாகும் மந்திரத்தில்
மறைவந்த மந்திரத்தால் மலர்நிலயன் மகிழ்ந்தேத்தும்
மறைதந்த மாமுதலின் அருளானே வண்டமிழின்
மறைதந்த மாறளவன் மட்டில்லா வணம்பாட (3)

அவையேறும் அருந்தமிழாம் கம்பனவன் அருங்கவிதை
சுவையூறுந் தெளிதேனும் சொல்லறிந்த நலத்தார்க்கே
அவையேனும் அரும்புலமை வாய்ந்தார்க்கோர் அமுதாமே
கவைநாவன் அணைசேருங் கண்ணற்கும் விருந்தாமே. (4)

கருணையதாற் கான்முனிவன் கண்டதனிக் கவியமுதைக்
கருணையதாற் கலைவலவர் விரித்தோதக் கம்பனவன்
கருணையதாற் கவியாக்கக், காகுத்தன் உளங்கொண்ட
கருணையதாங் காரோதம் காசினியிற் பரந்துளதே. (5)

கரமமருங் கனியதுபோற் கண்டதனி மாமுனிவன்
நரனெனவே நாரணன்றன் சரிதைதனை நவின்றனனே
வரமமரும் பத்தியினர் வணமுரைக்க வரகவியும்
நரனுருவில் நாரணனை நானிலத்திற் களித்தனனே. (6)

முதற்கவியாய் முனிவரன்முன் அளித்ததனி அமுதத்தை
முதற்கவியாம் கம்பனவன் முந்நீராய்ப் பெருக்கினனால்
முதற்கவியாம் அநுமனவன் மொய்புகழைக் காப்பதனில்
முதற்கவியாய்க் கிளர்ந்தோங்குந் திரையெனவே
மொழிந்தனனே. (7)

தண்ணியர்க்குந் தண்ணளியாந் தாசரதி தாளிணையின்
தண்ணிழலிற் றன்படிந்து தனியருளின் கடலாகிக்
கண்ணிறைந்த கருணையுடைக் கமலத்தாள் நிலையதனை
மண்ணுறைந்த பாற்கடலாய்ப் படைத்தனனாற்
[கம்பனுமே. (8)

தாரணியுந் தானுயரத் தாசரதி யாய்வந்த
நாரணனே புகலாகும் நானிலத்தே வரையில்லை
கூரணிவேற் குகனோடுங் குரங்கோடு வீடணனும்
சீரணிந்த தோழமையிற் சேர்ந்துயர்ந்த துரைத்தனனே. (9)

அறக்கடலாய அகலிடத்தே அவதரித்த ஒருநீல
நிறக்கடலைக் கவியதனில் நிலைசெய்தான் கவியமுதப்
புறக்கடலே மானவர்தாம் தெறிநோய்ந்து புந்திதெளி
வுறற்குடலாங் உத்தமதாம் பதமதற்கும் படியாமே. (10)

---

## ஸ்ரீ சோமசுந்தரத்தம்பிரான் அவர்கள் அருளிய வாழ்த்துரை

தமிழால் வாழ்ந்த புலவர் பல்லாயிரவராவர். தமிழை வாழ்வித்த புலவர் ஒரு சிலரேயாவர். வாழ்விக்கவந்த புலவர் வரிசையில் கம்பர், திருவள்ளுவர், இளங்கே மூவரையும் போற்றிப் பாராட்டியுள்ளார் பாரதியார் மூவரில் கம்பரும் திருவள்ளுவரும் தமிழுக்குச் சுதியாக உள்ளனர் என்பர் தமிழ்ச் சான்றோர்.

"விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பர்" என்று போற்றப் பெற்ற கவிச்சக்கரவர்த்தி கம்பர் நினைவு விழா மயிலைத் தமிழ்ச் சங்கத்தாரால் கொண்டாடப் பெறுவது மகிழ்ச்சிக்குரியதாகும். தமிழகத்தின் தலைநகரில் தமிழ்ப் புலவரேறு நினைவு விழாக்கொண்டாடுவதால் தமிழகம் முழுவதும் பயனடையும் என்பது ஒருதலை விழா இனிது சிறக்க ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைப் பிரார்த்திக் கிறேன்.

அன்புள்ள,
சோமசுந்தரத்தம்பிரான்.

41, உஸ்மான் சாலை,
தியாகராயநகர், சென்னை-17.